# शाहनक्षत्रमाला

# சாஹநக்ஷத்திரமாலா



Shaji (1684 - 1711)



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

மற்றும் ஆய்வு மையம் தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 590

# शाहनक्षत्रमाला

# சாஹநக்ஷத்திரமாலா

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்:

முனைவர் **வீ. இராமன்,**

உதவி பேராசிரியர், துறைத்தலைவர்,

அரசர் கல்லூரி,

திருவையாறு.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

மற்றும்

**ஆய்வு மையம்**

தஞ்சாவூர்

**2018** விலை : ரூ. 40-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : சாஹநக்ஷத்திரமாலா |
| பதிப்பாசிரியர் | : முனைவர் வீ. இராமன் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் |
| வெளியீட்டு எண் | : 590 |
| மொழி | : சம்ஸ்க்ருதம் & தமிழ் |
| பதிப்பு | : முதற் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2018 |
| தாள் | : TNPL. 18.6 கி.கி. |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ |
| பக்கங்கள் | : 104 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 16 &12 புள்ளி |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : இலக்கியம் |
| ISBN | : 978-93-85343-28-5 |
| விலை | : ரூ. 80.00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தமிழகத்தின் கலை மற்றும் பண்பாட்டிற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் தஞ்சைமாநகரத்தில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச் செல்வமாகப் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். இந்நூலகத்தை அணி செய்கின்ற அரிய சுவடிகளில் வெளிவராதவற்றை தேர்வு செய்து அவற்றை மொழிப்பண்டிதர்கள், துறை வல்லுநர்கள் மற்றும் சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்களை நியமித்து அவர்களைக் கொண்டு நூல்களாக பதிப்பித்து வெளியிட்டு வருகின்றது. அவ்வரிசையில் சாஹ நக்ஷத்திரமாலா என்னும் இந்நூல் முதற்பதிப்பாக வெளியிடப்படுகிறது.

சாஹ நக்ஷத்திரமாலா என்னும் இந்நூல் நாராயண பண்டிதரால் இயற்றப்பட்டது. இவரைப் பற்றிய மற்ற குறிப்புகள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. சகஜி மன்னரின் ஆட்சிக் காலத்தில் தஞ்சையில் வேதநெறி தழைத்து அவருடைய அவைக்களம் பல்கலைக்கழகமாக விளங்கியதால் நூலாக்கப் பணியிலும், நூல்களைத் தொகுக்கும் பணியிலும் அவர் மிகுந்த ஆர்வம் காட்டினார். இப்படிப்பட்ட பெருமை மிகுந்த சகஜி மன்னரைப் பற்றி புகழ்ந்து இயற்றப்பட்டதே சாஹ நக்ஷத்திரமாலா என்னும் இந்நூலாகும். இந்த நூலின் பதிப்பிற்கு அடிப்படையான ஓலைச்சுவடி தெலுங்கு எழுத்தில் எழுதப் பெற்றதாய் தஞ்சை சரசுவதி மகால் சம்ஸ்க்ருதத் துறையில் D.No.4236/B.10304 என்ற எண்ணில் பதிவாகியுள்ளது. இந்நூல் 30 ஸ்லோகங்களைக் கொண்டது. இதனை ஓலைச் சுவடியிலிருந்து பெயர்த்து

எழுதி பிழைநீக்கி வடமொழி மூலத்துடன் தமிழ்ச் ஒவ்வொரு ஸ்லோகத்திற்கும் கருத்துரையுடன் இந்நூல் அமைக்கப் பட்டிருக்கிறது. இந்நூலின் பதிப்புப் பணியை செவ்வனே செய்தளித்த இந்நூலக சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் முனைவர் வீ. இராமன் அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. மா. இராமகிருட்டினன், எம்.ஏ.,எம்ஃபில்.,எம்.எட்., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ். சுதர்ஷன். M.A.,B.Lit.,M.L.I.S.Ph.D., அவர்களுக்கும், அச்சகப் பிரிவினருக்கும், நூற்கட்டுப்பிரிவினருக்கும் மற்றும் நூலகப் பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூல் சகஜி மன்னரைப் பற்றி ஆய்வு செய்வோருக்கும் ஆன்மீக அன்பர்களுக்கும், ஆர்வலர்களுக்கும், பெரிதும் பயன்தரும்.

தஞ்சாவூர்
*12.01.2018*

**ஆ. அண்ணாதுரை,** இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# முன்னுரை

தஞ்சைத் தரணியில் தன்னிகரற்றுத் திகழும் சரசுவதி மகால் நூலகத்தில் பன்மொழிச்சுவடிகள் காணக்கிடைக்கின்றன. அவற்றுள் சமஸ்கிருத மொழிப்பிரிவில் மருத்துவம், இலக்கணம், புராணம், வைத்தியம் போன்ற பலவகைச் சுவடிகளையும் காணலாம். இலக்கிய வகையைச் சார்ந்து சமஸ்கிருதப் பிரிவில் பதிவு செய்யப்பட்ட சாஹ நக்ஷத்திரமாலா என்னும் இந்நூல் தற்போது வெளியிடப்படுகிறது.

## சகஜி மன்னன்

ஏகோஜி மன்னரை முன்மையாகக்கொண்டு கி.பி. 1676-ல் மராட்டிய அரசு தஞ்சைத் தரணியில் மலர்ந்தது. மன்னன் பத்து ஆண்டுகள் ஆட்சி புரிந்து மண்ணுலகு நீத்தான். மன்னன் மறைவினால், மராட்டிய மண்டலத்திலும், அரசியார் தீபாம்பாள் வாழ்விலும் இருள் சூழ்ந்தது. அமைச்சர் பெருமக்களும், அரசவை ஆலோசகர்களும் மராட்டிய குலக்கொழுந்துகளான சகஜி, சரபோஜி, துளஜா இவர்களுள், பதிமூன்று வயதே நிரம்பப் பெற்ற முன்னவனாகிய சகஜியை மன்னனாக்கி

மணிமகுடம் சூட்டினர். அன்னையார் தீபாம்பாள் அரசு வழிகாட்டிட, நல்லறம் போற்றிடும் அமைச்சு துணையிருக்க, தனது பிஞ்சுத் தோள்களில் மராட்டிய அரசினை சுமக்கத் தலைப்பட்டான் சகஜி மன்னன்.

ஆய கலைகளில் வல்லோனாக, ஆன்றோனாக, அத்துடன் கவிபுனையும் ஆற்றலும் மிக்கோனாக உயர்ந்து விளங்கிய சகஜி மன்னன் புகழ், மண்டலமெங்கும் வியாபித்து விரிந்தது. புலவரும், கவிஞரும், நுண்கலைவாணர்களும் மன்னர்தம் புகழ்பாடி மனங் குளிர்ந்து களித்தனர். அரண்மனை வளாகம் ஆனந்த வெள்ளமாகியது. நாட்டியம், இசை, கூத்து என நாள்தோறும் நிகழ்ச்சிப் பூக்கள் மணம் பரப்ப அரண்மனைக் கலையரங்கு அழகு பூந்தோட்டமானது.

மன்னனால் இயற்றப்பெற்ற சில நாடகங்களும் அரண்மனையில் அரங்கேறின. ‘விசுவாதீத விலாசம்’ ‘இராதாவம்சீதர விலாசம்’ ஆகிய இரு நாடகங்களும் மன்னர் இந்தி மொழியில் இயற்றியவை ‘காவேரி கல்யாணம்’, ‘தியாகேசர் குறவஞ்சி’. இவைகளும் தனக்கென்று தனித்தன்மை கொண்டு இசைக்கு மாபெரும் சேவை புரிந்திருக்கிறார். இவர் பின்பற்றிய

வழியானது, மகான் ஸ்ரீ வேங்கடமஹியின் சம்பிரதாயத்தை அனுசரித்துள்ளது.

நரஸ்துதியே செய்யாத திருவிசநல்லூர் அய்யாவாள் என்கிற ஸ்ரீதரவேங்கடேசர் சாகேந்திர விலாசம் என்கிற 200 ஸ்லோகங்களுக்கும் மேற்கொண்ட கிரந்தத்தைச் செய்து சகஜி மன்னரைப் புகழ்ந்து பாடியிருப்பதிலிருந்தே இவரது பெருமையையும் இவர் எப்படிப்பட்டவர் என்பதையும் ஊகிக்கலாம்.

இம்மன்னரிடம் நூற்றுக்கணக்கான ஆஸ்தான வித்வான்கள் இசையைப் பேணி வளர்த்து உள்ளார்கள். அவர்களுள் முக்கியமானவர், ஸ்ரீ தியாகபிரும்மத்தின் மாதாமகர் (தாய்வழிப் பாட்டனார்) 'கிரிராஜ சுதா தனயா சதயா' என்ற பங்களா ராக கீர்த்தனையைப் பாடியிருப்பதானது இங்கு கவனிக்கத்தக்கது.

## நூலாசிரியர் மற்றும் நூல் தோற்றம்

நாயக்கர் காலத்தில் தமிழ்நாட்டுக்குரிய கிரந்த எழுத்தில் பிறமொழி நூல்கள் எழுதப்பட்டன. மேலும் நாயக்கர் ஆட்சியில் தெலுங்கு எழுத்தில் வடமொழி நூல்களின் நகல்கள் எடுக்கப்பட்டன. மராட்டியர்கள் காலத்தில் கையினால் செய்த

காகிதத்தின் வரவால் நாகரி எழுத்தில் பிறமொழிச் சுவடிகள் படியெடுக்கப்படன.

1855 வரையில் ஓலையில் தெலுங்குமொழி மட்டுமே அல்லாமல் பிறமொழி நூல்களையும் தெலுங்கு எழுத்தில் ஓலைச்சுவடிகளில் எழுதி உருவாக்கியவர்களும் மராட்டிய மன்னர்களே ஆவர்.

சகஜி மன்னரின் ஆட்சிக் காலத்தில் தஞ்சையில் வேதநெறி தழைத்து அவருடைய அவைக்களம் பல்கலைக்கழகமாக விளங்கியதால் நூலாக்கப் பணியிலும், நூல்களைத் தொகுக்கும் பணியிலும் அவர் மிகுந்த ஆர்வம் காட்டினார். சரசுவதி மகால் நூலகத் தொகுப்புக்கள் இம்மன்னர் காலத்தில் பெருகின.

சாஹ நக்ஷத்திரமாலா என்னும் நூல் நாராயண பண்டிதரால் இயற்றப்பட்டது. இவரைப் பற்றியதானக் குறிப்புகள் சரிவரக் கிடைக்கப் பெறவில்லை. இவரது காலம் A.D.1700-1750ஆக இருக்கலாம். நாராயண வித்வான் என்று 19th catalogue page No.10,12-37ல் குறிப்பிட்டுள்ளதால் இவரது காலம் கி.பி. 18ம் நூற்றாண்டாகும். இந்நூல் தெலுங்கு எழுத்தில் எழுதப்பட்ட வடமொழி நூலாகும். இதுவரை இந்நூல்

வடமொழி நூலாகும். இதுவரை இந்நூல் வெளிவரவில்லை. இதில் 27 ஸ்லோகங்களால் சகஜி மன்னரைப் பற்றி புகழ்ந்து போற்றப்பட்டுள்ளது.

உதாஹரணமாக 29வது ஸ்லோகத்தில் நாராயணன் என்கிற இந்தப் பண்டிதனால் பெருமைப்படுத்தப்பட்ட செல்வமும் மற்றும் நக்ஷத்திரமாலைகளாக கழுத்து மாலையாக பண்டிதர்களுக்கு ப்ரகாசிக்கட்டும். உள்ளம் கவர் முத்துக்கள் கோத்திட உற்சாக மூட்டும் கண்கள் மலர்ந்திட நாயகன் நீயேயென்று மற்றவர்கள் நாயகிகளாகி என் கவிதை கொண்டு அவர்கள் பாமாலைச் சூட்டுவர் உனக்கு என்று இவ்வாறு வர்ணிக்கிறார் நூலாசிரியர்.

## பதிப்பிற்குதவிய சுவடி

சாஹ நக்ஷத்திரமாலா எனும் இந்த நூலின் பதிப்பிற்கு அடிப்படையான ஓலைச்சுவடி தெலுங்கு எழுத்தில் எழுதப் பெற்றதாய் தஞ்சை சரசுவதி மகால் சம்ஸ்க்ருதத் துறையில் D.No.4236/ B.10304 என்ற எண்ணில் பதிவாகியுள்ளது.

## பதிப்பு முறை

இந்நூல் 30 ஸ்லோகங்களைக் கொண்டது. இதனை ஓலைச் சுவடியிலிருந்து பெயர்த்து எழுதி

பிழைநீக்கி வடமொழி மூலத்துடன் தமிழில் ஒவ்வொரு ஸ்லோகத்திற்கும் கருத்துரையாக அமைய பதிப்புப்பணி மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

### பயன்கள்

சாஹ நக்ஷத்திரமாலா என்ற இந்நூற்பதிப்பு தஞ்சை நகரைக் கல்வியில் சிறந்த நகரமாக்கும் முயற்சியில் அயராது பாடுபட்டவர் சகஜி மன்னர். அவர் பல நூலகத்தினை வளர்த்துள்ளார். அந்த மன்னரைப் பற்றி ஆராய்ச்சி செய்வோருக்கு பெரிதும் பயன்தரும்.

### நன்றியுரை

சாஹ நக்ஷத்திர மாலா என்ற சுவடி நூலை பதிப்பிக்க ஆணை வழங்கிய முன்னாள் மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநருமான டாக்டர் என். சுப்பையன், இ.ஆ.ப., அவர்களுக்கும் இந்நாள் மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநருமான ஆ. அண்ணாதுரை, இ.ஆ.ப., அவர்களுக்கும், இந்நூலக நூலகர் முனைவர் எஸ். சுதர்ஷன் அவர்களுக்கும், இச்சுவடி நூலை தெலுங்கிலிருந்து நாகரி எழுத்தாக்3கம் செய்தளித்த சரசுவதி மகால் நூலக சமஸ்கிருதப் பண்டிதர்

முனைவர் ஆ. வீரராகவன் அவர்களுக்கும், இந்நூலை நுண்ணாய்வு செயதளித்த Dr. V.M.அநந்தநாராயணன், தேசியக்கல்லூரி பேராசிரியர், திருச்சி அவர்களுக்கும், எனது நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலினை சிறப்பாகச் செய்தளித்த நூலக கணினி பிரிவினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் மற்றும் இதற்குத் துணைநின்ற ஏனையோருக்கும் எனது உளங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

தஞ்சாவூர்
**20.10.2017**

**வீ. இராமன்,**
சிறப்புக்கேண்மைப்பதிப்பாசிரியர்,
சரசுவதி மகால் நூலகம்,



# विषयानुक्रमणिका (பொருளடக்கம்)

பக்க எண்





# ।। शाहनक्षत्रमाला ।।

गीर्वाणाचार्यसर्वेसितकृतिकलितकिन्नरैर्गीयमानं
श्रावं श्रावं त्वदीयं वरगुणनिकरं शाखजान्दोलनेन ।
पत्युर्मौलेस्सपत्नीं भुवि गलितवतीं वीक्ष्य गङ्गां सहर्षात्
कल्याणं ते विधत्तां क्षितिधरतनया शाहपृथ्वीसुधांशो ।।१।।

1. ஸ்ரீ சாஹ மன்னரே ! பூமிக்கு நிலவு போன்றவரே. மலைமகள் பார்வதி தேவியார் தனது நாயகன் பரமசிவனின் ஜடைமுடியிலிருந்து அவதரித்த கங்கையைக் கண்டு தனது ஸபத்னியானாலும் (சக்களத்தி) தனக்கே உரியபாணியில் கலகமின்றி கலகலப்பாய் இந்த மன்னனுக்கு மனமே களிநடம்புரிய அருள்புரிவாள்.

சுகவருஷம் ஸந்தோஷத்துடன் இருந்திட நின் பெருமைக் கேட்டுக்கேட்டு, கேட்பதற்கு முன்பே நின் கொடைவள்ளல் தன்மை மனிதர்களென்ன! கின்னரர் களும் (நரம் கலந்த மிருகம்) பாடிடும் வண்ணம் வடமொழிப் புலவர்கள் மற்றும் ஆசான்கள் இயற்றிய பாடல்களை அவை பாடிட உமக்கு மேலும் மேலும் மங்களங்கள் பெருக வேண்டுமென பார்வதி தேவியார் அருளட்டும்.

इन्दोरानन्दनीया विलसतिभवतः कीर्तिलक्ष्मीरुदारा-
सूर्यस्याहं सपर्या विरचनविषयः स्फीयमानः प्रतापः ।
इन्द्रः स्यामन्दमन्तहृदि बहिरपि च श्लाघनीयः प्रभावः
श्रीशाहेशानरूपं वपुषि च नितरां अश्विनी राजनीयम् ।।२।।

2. மாமன்னரே! உமது உடலழகு அஸ்வினி குமாரர்களின் அழகுக்கு நிகரானது. தேவேந்திரனும் கொண்டாடத்தக்க புவி உலகு இந்திரனென பெருமை பெற்றவர். சூரியனின் இரு மனைவிமார்கள் எப்படி ஒன்றுபட்டுள்ளனரோ அப்படி நின் ராஜ்யஸ்ரீயும் பட்டமகிஷியும் ஒன்றுபட்டுள்ளனர். சூரியன் போன்ற உன்னைக்கண்டு சூரிய காந்தக்கல் உருகும். சந்திரன் போன்ற உன் மனைவியைக் கண்டு ராஜ்யலட்சுமியே ஆசைப்படுவாள். உன் கீர்த்தியெனும் வெண்மையைக் கண்டு நிலவும் உன் மீது உலாவும். ஸ்ரீசாஹஹன் என்பது உனக்குப் பொருத்தமே. (ஸ்ரீ என்றால் லக்மீ,ச என்றால் பார்வதி. ஹ என்றால் ஹரிணி).

गाम्भीर्यौदार्य शौर्यप्रभृतिगुणगणः कश्चिदास्ते तुलस्ते
दीनापन्नर्तिवार्ता परिहृति निपुणो भातिभूतानुकम्पा ।
दुग्धाम्भोराशिमध्योद्गलदमृतझरी सोदरीचोक्तिरिन्दे
श्रीशाहक्ष्मापते ते चिरमिहजगतां आभरण्यस्य कीर्तिः ।।३।।

3. மன்னரே ! உன் மீது தவழ்கின்ற நகைகள் முகத்தில் பூத்த புன்னகையின் ஸஹோதரர்கள். புகழின் உறவினர்கள். பாற்கடலில் தோன்றிய சந்திரன் உன் வார்த்தை அமுதத்தோடு பிறந்ததோ! நீ காட்டுகின்ற கருணை நிகரற்ற ஒன்று. உன் கம்பீரம், கொடைவள்ளல் குணம் எல்லாம் உனக்காகவே பிறந்துள்ளன.

श्री शाहक्षोणिपालप्रभुवरभवतः कीर्तिरुज्जृम्भमाणा-
मध्ये विभ्राजमाना परिहसतितरां व्योमसिन्धुः स्तनिम्ना ।

दुधाम्भोराशिमन्तर्मधुमथनमसि स्वर्णदीं शैवलां कां
किञ्चिन्यञ्चन्निबद्धद्विपजतितनुभूकृत्तिकाद्धूरुहाङ्गम् ।।४।।

4. மன்னரே ! மற்ற அரசர்களெல்லாம் அரசர்களாகிய அரசு மரங்களே! ஆகாயத்தில் ஓடும் கங்கை பகீரதனுக்காக பூமியில் பெருகி, பாதாளம் சென்றது. நின் புகழும் அப்படியே. நின் ராஜ்யத்தின் செழிப்பு தேவலோக கங்கையின் பாசியென வானத்தில் நிலவும் மேகங்களாய் அதில் தோன்றிய பௌர்ணமியாய் பாற்கடலின் ஆவியே மேக கடலாயிற்று. மேகதூதம் பாடினான். இன்று நான் மோஹகீதம் பாடுகின்றேன். புருவம் நெறிக்க நின் பெருமை கேட்டு மகிழ்வர்.

श्रीमन्पृथ्वीश शाहप्रभुवरभवतो जैत्रयात्रासुधावति
घाटीताटी समाटिकनचटुलखुराघातनिर्यद्रजोभिः ।
गाधिभूतापयोभिस्सपदि विदधते हन्त । भूयोप्यगाधान्
बाष्पासारा वधूनां क्षितिधरशिखरा रोहिणीनां रिपूणाम् ।।५।।

5. மன்னரே! சந்திரன் மனைவி ரோஹிணியை கண்டு கலங்கிய மற்ற மனைவிமார்கள் பிரிவுக் கண்ணீர் வடித்தனர். அது போல பகைவர் மனைவிகள் கண்ணீர் வடித்தாலும் அது காமினிக்கு கரை படிந்தாலும் காமத்தில் குறை காணாததுபோல சோகம் உனக்கு சுலோகமெனும் புகழைத் தருகிறது. ஜய யாத்திரை செல்லும் நீ புழுதி கிளம்பிட, கிளம்பிய புழுதிகள் வானத்தின் நிலவில் கலந்திட, கண்ணீரைத் துடைக்க உனக்கு பன்னீரை வீசிட பௌர்ணமி தோன்றுகிறது.

हस्ताग्राभ्राम्यमाणप्रचुरधलधलद्खड्गनिष्कृष्टमूर्ध्नाः
कर्तुं दैत्यानपि त्वं प्रभवसि समरे किं पुनर्मर्त्यपाशान् ।
दृष्यद्दन्तीन्द्रकुम्भस्थलदलनपटा किन्नु कण्ठं विपश्य
श्रीशाहेशानचित्रस्फुरति मृगशिरः स्वाक्रमे विक्रमेण ।।६।।

6. மன்னா! நீ மனிதர்களை மட்டுமா கவர்ந்திழுக்கிறாய் ! சிற்றரசர்களை மட்டுமா வெல்கிறாய், மனிதர்களிலும் வேறுபட்ட மாமிசம் உண்ணும் அரக்கர்களையும், சிறிது நல்ல குணம் படைத்த அஸுரர்களையும் நின் புத்தியால் மற்றும் கத்தியால் மற்றும் கைகளால், மல்யுத்தத்தால் குடுமிப்பிடிச் சண்டயில் எல்லோரும் குதூகலிக்கும்படி செய்கிறாய்.

सन्दृश्यन्ते कविनीं कनकमयतलोत्कीर्णमाणिख्यपूर्णः
शश्वद्वेतण्डस्थलगलितमदस्तस्त्रौतसापूर्यमाणः ।
किञ्चोदञ्जित समस्यामुखरितकलभः किरडिम्भस्सडम्भैः
वासा श्रीशाहपृथ्वीपरिबृढकरुणा मेदुराद्रा विलोकात् ।।७।।

7. மன்னரே! கவிகளின் வாக்கு கவிதைகளாக மாறி அந்த கவிதைகள் தேனாக பெருகி சந்திரனில் விழ, சந்திரன் வெண்மையாகிய பௌர்ணமி நிலவில் கடலில் முத்துக்களாக மாற கடற்கரை மூங்கிலில் உரசுகின்ற யானைக்குட்டிகள் தாயோடு சேர்ந்து தந்தையுடன் மகிழ்ந்து நிற்க கவிகளின் ஸங்கீதம் கேட்ட இந்த ப்ராணிகள் மத ஜலத்தில் மோஹித்தனவா ! அல்லது மன்னனின் படைபலம் எழுப்பிய புழுதிகள் மேகத்தைத் தொட்டு பொழிந்திடச் செய்த ஆகாய கங்கை நீரால்

குளிப்பாட்டப்பட்டு மேக கருப்பே யானையின் கருப்பாக ஆனந்த நடனம் ஆடின. ஸ்ரீ சாஹ மன்னரின் பெருமையே பௌர்ணமி. எதிரிகளின் வீழ்ச்சியே கருப்பு, மக்களின் ஆனந்தமே யானையின் ஆனந்தம்.

मातङ्गान् मदसङ्गिभृङ्गकुटिलां झङ्कारफूत्कारितान्
उत्तुङ्गाश्चतुरङ्गमानुपमान् भूषिविशेषानपि ।
श्रीशाहेश्वरपारितोषिक (कला) प्राप्य प्रबन्धेषु ते
विद्वन्नस्य पुनर्वसूनि परतः किंस्वित् समादित्सते ।।८।।

8. யானைக்கு மாதங்கம் என்று பெயர் ஸ்ரீசாக மன்னரே ! உன்னிடம்கவிதை எழுதி பரிசு பெற்றவர்கள் வருகின்ற அடுத்த புலவர்களுக்கு அவர்களே தானம் (பரிசு) கொடுத்து விடுகிறார்கள். அப்படி தானம் என்கிற சொல்கேட்டு தங்களுடைய மத ஜலமோ என்று யானைக் கூட்டங்களும், மத ஜலத்தை வெளியேற்றிட, அதில் வண்டுகள் மொய்த்திட அந்த யானையின் தும்பிக்கை காற்றுகள் மற்றும் சத்தங்கள் கஜவள்ளி போன்ற தாவரங்களை மலரச்செய்துவிடுகின்றன. "சீது கண்டூஷ ஸேகாத்" யானையொத்த கால்கள் பொருந்திய கற்புடைய பெண்கள் தாம்பூல எச்சில் மற்றும் வாயால் ஊதுதலால் பால் மரங்கள் யானை புற்கள் (கஜவள்ளி) பூக்குமென காளிதாஸன் சொன்னது. மாளவிகாக்னிமித்ரத்தில் உதாஹரித்ததை இங்கும் கவி காட்டுகின்றான்.

सङ्ग्रामे शाहपृथ्वी कमितुरभिमुखं द्रौपतद्भ्योपि तूर्णा-
कान्तारान्तः प्रतिष्ठासहित नरपतीन् साभिमानान्प्रतीमः ।

जम्भारातेः सभायां तवगुणनिकरा रम्भयोगीयमाना-
नैवाकर्ण्यं इतीमं कुवचनकुहरे येन पुष्यन्ति गात्रम् ।।९।।

9. ஸ்ரீசாஹ ராஜாவே! யுத்த களத்தில் எதிரிகளுக்கு கௌரவர்கள், பாண்டவர்கள் இவர்களிடையே நான் முன்னே நான் முன்னே என்று வெற்றிக்கொடிகள் போன்ற, உமக்கும் எதிரிகளுக்கும் நடந்த யுத்தமென அறிவோம். நின் புகழ்பாடும் தேவர் ஸபையில்கூட இதுவரை அவர்கள் கேட்டிருக்க முடியாது. புவி உலகில் நாங்கள் புல்லரிக்குமாறு உன் புகழ் பாடுவோம்.

श्रीशाहक्ष्मापतीन्दो तव तुरगखुर क्षुण्णपृथ्वीसमेधां-
धूलीपालीं समन्तात्समसमयसमुज्जुम्भमाणं समीक्ष्य ।
आराद्धौमस्सहर्षन् दरमभिनिपतत्यानतीं कर्तुकामः
गाढाश्लेषाय शौरि दृढयति शिथिलं कौस्तुभं राजबुध्या ।।१०।।

10. மன்னரே ! கண்ணன்கூட சூரன் என்கிற வஸுதேவரின் புதல்வனாய், சௌரி என்பவரால் தன் கழுத்திற்கு கீழேயுள்ள கௌஸ்துபத்தைக் கண்டு, நின் திருமார்பிலிருக்கும் ராஜ ஆபரணம் அங்கி கௌஸ்துபத்திற்கு ஸமமே என்று நினைத்து, சந்திரன் போன்று புகழுடைய உன் ராஜ்யமெனும் நினைவில் மிதக்கின்ற மான் புவியில் கால் குதித்து புழுதி எழுப்பி அது சந்திரனில் பரவி சந்திரன் நடுவே இருளாக்கி இருளுக்கு மேலே நகையாக்கி எங்களை வியப்பு புன்னகையுடன் நோக்கிடச்செய்து இதனைக்கண்டு அந்த சௌரியென்னும் கண்ணனும் ஸ்ரீசாஹராஜாப்போல நினைத்து மகிழ்ந்தான்.

पारावरानपारान् भुवनसमभिधान् पूरयन्तस्समन्तात्-
सप्ताथसप्तमूर्ध्वं निरवधिवसुधादृष्टितः पुष्टिमन्तः ।
श्रीशाहेशांनपृथ्वीधरवरशिखरात् सर्वतः सम्मुखीनाः
स्यन्दन्ते सन्ततौघाः प्रमुषितप्रमुखाः कीर्तनानिस्तनिम्नाः ।।११

11. ஶ்ரீ சாஹ மன்னனின் பெருமையெனும் மலையிலிருந்து புகழெனும் ஆறுகள் ப்ரவாஹமெனும் முகத்துடன் பசுமைக் காடுகளெனும் கரைகளுடன் ஏழு குதிரையில் பூட்டிய சூரியன் போல, ஸப்த ரிஷிகள் போல, புவியைக்குளிர வைக்க வந்த வற்றாத ஜீவநதிகளாய், பாவமெனும் நீரால் கரை உடைத்து கூலங்கஷமாய் முற்றிவிட்ட கலிகாலத்தில் வெள்ளைக் குதிரையில் விஷ்ணுயசஸ் என்கிற கல்கி அவதாரம் போல் க்யாதி என்கிற புகழ் திக்கெட்டும் மற்றும் மேலும் கீழுமாகிற திசைகள் பத்தில் கரையற்ற கடல்களாய் எனது கவிதை இதனை உடனே நீர் கேட்டு ஆனந்திக்க வேண்டும்.

या नीतिं कार्यसिद्धौ प्रतिपदमुदिता स्वादुकामन्तकीया
या चाणक्येन पूर्वं बत गणजटिलो राक्षसे च प्रयुक्ता ।
या च स्वीयैरमात्यैस्सततबहुमता रोचते सैवतुभ्यं-
ना पूर्वं फलगुनीतिस्तदसि धरणीं शाहभूपत्वमेकः ।।१२।।

12. மன்னரே ! நீர் ஒருவரே அர்ஜுனனுக்கு நிகரானவர். அரசன் என்றால் நீரே. அமாத்யர்களெனும் மந்திரிகள் என்றால் உன்னைச் சார்ந்தவர்களே. உனக்கு சமமே இல்லாதபோது மிகைப்பட்டவர் யார் ?

உன்னுடைய வெற்றியைக் கண்டுதான் உன் முயற்சியை முடிவு செய்ய முடியும். நின் திருவினை முயற்சியாக்குமே தவிர. மற்றவர்களுக்கு முயற்சி திருவினையாக்கும். அமாத்யன் ராக்ஷஸனை நந்தவம்சத்து முத்திரைக் கொண்டு குடில மதியால் குறுக்கு வழியில் சணகம் என்கிற கடலைக்காய்கள் போல ராஜநூலைக் கற்றறிந்த சாணக்யன் போல, கௌடில்யம், விஷ்ணுகுப்தன் என்பவன் முத்திரையால் ராக்ஷஸனை பிடித்து அவனை மந்திரியாக்கி நந்தவம்சத்தை நிர்மூலமாக்கிய சாணக்கியனுக்கு நிகர் வேண்டுமானால் ஸ்ரீசாஹமன்னர்தான் தகும்.

दष्ट्वा किं विरचति क्वचिदियमिवहा प्राप्तदुःखातिजालैः
किं वा वीरप्रसूश्चाप्यहमिह भुवने वीक्षिताकर्णिता वा ।
इत्युक्ताः स्वं स्नुषाम्भ प्रतिहतसुतया त्वद्रिपुः स्वीयनार्या
आशाहेन्दोपमेयं कथमति कथमप्युत्तराफल्गुनीति ॥१३॥

***13.*** மன்னரே! ஆசாஹ இந்து - ஸ்ரீ சாஹ சந்திரன் உமக்கு உவமை உத்தரபல்குனி. சந்திரனுக்கும் உத்தரபல்குனிக்கும் பொருத்தம்தானே. உத்திரைக்கும் பால்குணனுக்கும் (அர்ஜுனனுக்கும்) போல உமக்கும் உத்தரபல்குனிக்கும் எதிரிகள் வீழ்ந்ததால் அவரது மனைவிமார்களும் வீழ்ந்தார்கள் போல நின் காந்தியால் அவர்கள் ப்ரஸவிக்கவே சாந்தரானார்கள். மலடிகள் ஆனார்கள். எதிரிகள் அழிந்ததால் குழந்தை பேறு அற்றவர்களானார்கள். அப்படியே மக்கள் செல்வம் பெற்றாலும் ஒன்றிரண்டைப் பெற்று தோப்புக்குச் சொந்தக்காரர்கள் ஆகவில்லை. உனது தேசமெல்லாம்

அவர்களது கண்ணீர்களால் (உப்பு நீர்களால்) ஆற்று நீர்களும் (ஸமுத்திரம்) ஆகரம்போல் கடல் சூழ்ந்த பூமியாயிற்று.

गौरीनादिवरणेहवसदसिकरगृह्णता कीर्तिमूर्ति-
श्रीशाहेशत्वयाद्यप्रगुणितमहा सोविक्रमान्यस्समक्षम् ।
सप्तदीपाश्च सप्तक्रमविथिविषयाः कल्पिता किञ्च लाजाः
स्वच्छन्तश्छायमानदखिलसदसि निष्कृत्तमत्तेभयुक्ताः ।।१४।।

*14.* மன்னரே ! நின் தேசத்தில் யானைகள், தீவுகள், மங்கள லாஜங்கள் (பொறிகள்) இவையெல்லாம் மலிவாக இருந்தன. உருவம், புகழ் இவற்றால் வீரத்தால், மலையரசி (பார்வதி) மஹேச்வரன் (சிவன்)ஆதித்யன் (சூரியன்) ஸுதாம்சு (சந்திரன்) திக்குகள் (திசைகள்) த்வீபங்கள் (தீபகர்பங்கள்) லாஜங்கள் (அவல் பொறிகள் மற்றும் பஞ்சகவ்யங்கள்) இவையெல்லாம் மலிவாக கிடைத்தன.

धाताभूर्विरमिभिः जगदिदमखिलं निर्मिमीतां त्वान्यान्-
सामग्रीस्स्यात्समग्राविरचनविषये तेष्वसाधारणी ते ।
यं मर्मं वसामिरोममलयदममृतं व्योमहेमाचलं चेत्
ऋतं नो चेद्विच्चित्र्या गुणसरणि विहरते कथं भोसलेन्दो ।।१५।।

*15.* சந்திரன் போன்று சீதமாக (குளர்ச்சியாக) நிலவு மற்றும் நிலவுக்களியாட்டங்கள் இவையெல்லாம் உண்மையென்றால் உன்னாலேயேதான். புகழைக் கண்டு நகரமே குளிர்ந்தது. அமுதமும் கூட தேவலோகத்தில்

பரவிய நின் புகழால் மானிட உலகில் கிடைத்தது. மேரு மலையும் பெயரளவில் இல்லாமல் நீ செய்த தானத்தால் மெருகூட்டி நின்றது. உனக்கு நிகர் அந்த ப்ரஹ்மா வேறொன்றை படைக்கத் தெரியாமல் உன்னையே படைத்துவிட்டான். இதுதான் உண்மை.

शर्वसार्वज्ञमाहुर्झटितिविघटये दर्पको रूपपर्व-
मुञ्चेत्किञ्चामरामणीं तरुरपि लघयेदद्यदानेभिमानम् ।
सर्वं निर्वापयेत त्रिदशपतिरपि प्राभवेद्प्रौढिमानं-
स्वस्वातीतैर्णौघैः विलसति जगति मण्डले शाहभूप ।।१६।।

**16.** சாஹ மன்னரே ! நின்குணங்கள் பேசவேண்டுமெனில் இந்திரன்தான் வரவேண்டும் கற்பக மரத்தைப் பார்க்க வேண்டுமானால் உன்னைத்தான் பார்க்கவேண்டும். ஸர்வஜ்ஞன், ஸர்வேச்வரன், ஸாம்பசிவன், சாந்தாகாரன், கமலாஸனன் அனைத்தும் நீரே.

गङ्गारिङ्खत्तरङ्गेत्यहिविषमदृशा द्राक्पिनाको हि नृत्ता-
द्युक्तः स्स इत्ये- स्समरपरिबृढैः आशु सम्मूखमेव ।
कैलाशाद्रिस्समुज्जृम्भितेतिसभयं विदृतं शाम्भभृत्यो
इत्थं श्री शाहपृथ्वीधरभुवन विशाखेलितं हन्त । कीर्त्या ।।१७

**17.** ஸ்ரீசாஹ அரசரே ! பூமியைக் காத்திட விளையாட்டாகக்கூட வேறொருவர் கனவும் காணக்கூடாது. கைலாய மலையை கைகளால் அசைத்தவன் பத்துதலை ராவணன். நீ ஒரு

தலையாலேயே அசைத்து விட்டாய். யுத்த களத்தில் பாண்டவர்களுக்கு எதிரில் நின்ற பீஷ்மரும், கௌரவர்களும் உன்னைப் பார்த்தாலே ஓடிவிடுவார்கள். சாரங்கபாணி என்று நினைத்து அருகில் பினாகபாணியான சிவன் வந்தால் பெண்ணையாறுபோல பெயர்ளவிற்கு ஜீவநதி போல காட்சி தருவான். இராமன் கைப்பட்டதால் சிவதனுஸ்ஸும், வைஷ்ணவ தனுஸ்ஸும் (பரசுராமரை வென்றது) தோற்கடிக்கப்பட்டது. உண்மையில் இராமன் க்ஷத்ரியன் ஆதலால் அரசமரத்துவில் , அரசமரதண்டம், பரசுராமனை வென்றதால் வைஷ்ணவ தனுஷ்பலம் மற்றும் பலாசதண்ட பலமும் இராமனுக்கு ப்ரஹ்மண்யத்தைக் கொடுத்தது. ஆனால் ப்ரஹ்மண்யமே நிறைந்த உன் தேசத்தில் இராமராஜ்யம் கேள்விக்குறியாகி விட்டது.

गाम्भीर्याम्भोनिधिस्त्वं कनकगिरिरभूदुन्नतत्वं क्षमायां
क्षोणी तदोक्तौ यद्यवहतिषुफणिगीष्पतिर्युक्तकाले ।
वेद्यश्रीकार्तवीर्ययशसिरघुपति र्भासि मारः प्रतापे-
भानुराधातनूजो वितरणविषये शाहपृथ्वी सुधांशो ॥१८॥

**18.** சாஹ மன்ன சந்திரனே ! கொடுப்பதில் மற்றும் வீரத்தில், அழகில், வலிமையில், குபேரன், மன்மதன், இராமன், கார்த்தவீர்யார்ஜுனன் இவர்களுக்கு சமமானவர். காம்பீர்யத்தில் கடல்போன்றும், உயர்வில் மேருமலை, பொறுமையில் பூமி, பயம் காட்டுவதில் ஆதிசேஷன். உலகத்திலுள்ள உவமையெல்லாம் உமக்கே பொருந்தும்.

येषां शिष्यप्रशिष्या दिशि दिशि विजयस्तम्भमुज्जृम्भयन्ते-
येषामेषा मनीषादिषणमपि मृषा वैदुषीकं विधत्ते ।
येषां शक्ताः कृपालो वितरितुमपि षड्दर्शनीमैवमूकाः
ज्येष्ठास्ते श्रितकालावगतिभिरपि ते शाहजेन्दोस्सदस्याः ॥१९॥

**19.** சீடர்கள் அவர்களது சீடர்கள் திசையெங்கும் விஜயஸ்தம்பம் நாட்டி, பாண்டித்யம் பரப்ப வந்த பட்டாடைக் கொடிகள் ஏந்திய ஜயக்கம்பங்களாக அதில் பூக்களான ஷட்தர்சனங்களும் .உன் புகழைப் பாடுகின்றன. வறுமையென்பது ஏது? வறுமையென்பது வாராமையன்றே நின் தேசத்தில். வளமை என்பது தம்பியாய், வள்ளல் என்பது அண்ணனாய் உன்னிடம் உள்ளது.

वेदे पादावभूते श्रुतिपदगमिते विश्रते श्रौंतमार्गे-
सनाते वार्ता विहीने जगदुदयपदे सङ्कटौ सूत्रिते च ।
भद्रे विद्राजितेन्द्रागपि कलिङ्ग लुषः पौरुषात्ताम्रशक्ते-
स्त्वन्मूलंशाहपृथ्वीपरिबृडभुवने धर्मबीजं प्ररूढम् ॥२०॥त

**20.** தர்மம் நிலைக்க வேதம், வேதம் நிலைக்க ப்ராஹ்மணர்கள், ப்ராஹ்மணர்கள் நிலைக்க ப்ரஜா ரக்ஷகனாகிய மன்னர்கள் என்று போஜ மாமன்னர் காட்டியது பஹுஜன மார்க்கம் நின் தேசத்தில் வேதம், ஸ்ம்ருதி, ச்ரௌதம், ஸூத்ரம், கலியுக ப்ரபாவம், போக்கும் க்ருதயுக தர்மம் எல்லாம் தர்மத்தின் த்வாரங்களாய் உனது தர்ம பீஜம் வேரூன்றி விட்டது.

श्रीशाहजेन्द्रभूपालप्रभुवरसुमनो बृन्दमन्दारशाखी-
यद्वेभिधाद्यमास्ते परिसरपतयः प्राप्यभङ्गं भवत्तः ।
केचित्तेरातरीतिं कतिचन विपने काव्यवाहानुरूप्यं-
शेष्याषाढाद्यव्यवहरापरिकरनिकरान् बिभ्रते भूसुराणाम् ।।२१।।

*21.* மன்னரே ! ஆதிசேஷனை படுக்கையாகக் கொண்ட சேஷீ ஸ்வாமி நாராயணன் போல தேவ வ்ருக்ஷங்கள், சிற்றரசர்கள், நின் அமைச்சர்கள் இருந்திட உன்னிடம் பயந்த எதிரிகள்நின் புகழைப்பாடி கப்பம் கட்டி உன்னை சக்ரவர்த்தியாக்கி தர்மத்தை நிலைநிறுத்தும் ப்ராஹ்மணோத்தமர்களும் பூரம், உத்திரம், பூரட்டாதி, உத்திரட்டாதி, பூராடம், உத்திராடம் ஆகிய ஆஷாட ஷட்கங்கள் போராடும் நக்ஷத்திரங்கள் போல எதிரிகளையும், ப்ராஹ்மணோத்தமர்களையும் கவருகின்ற ஆற்றல் உமக்கு இருக்கின்றது.

श्रीशाहशाक्षोणिपालक्षितिधरविलसन्मस्तकन्यस्तपादं-
दिव्यापादानुलिप्सु द्विजवरसदनां जीवनोपासि हेतुम् ।
वर्तमानं भीर्युत्तरं षाडयन्तं वरमणिधनुष्या स्निग्धगम्भीरघोषं
तां मापरषाढाषेव्यवनलीलधरं वीक्ष्या नन्दन्ति सन्तः ।।२२।।

*22.* நல்லவர்களெல்லாம் உம்மைக் கண்டு உமது கம்பீரத்தைப் பார்த்து ஆஷாடமாஸமென்கிற விட்டு விட்டு பொழிகின்ற பர்வத்தையும் மாற்றியமைத்து மழைபொழியச் செய்து பேரிரைச்சல் கடலாக்கி ஆகாயம் இடித்திட பயிர்கள் செழித்திட விவசாயம் பெருகி எல்லோரும் ஸந்தோஷிக்க, ப்ராஹ்மணர்கள் க்ஷேமமாக

இருக்க திக்கஜங்கள் ஸந்தோஷத்துடன், திக்பாலர்கள் மகிழ்ச்சியுடன் மாமன்னன் ஸ்ரீசாஹறன் என்று மன்னரைக் கொண்டாடினார்கள்.

आज्ञाराज्ञं त्वदीयास्फुटतटोपान्तविश्रान्तसारां-
कीर्तिस्फूर्तिस्वधियविकचितविहृतिं चक्रवालान्तराले ।
सम्पत्यापादिता ते प्रभवति विदुषा ह्याश्रितानां च गुप्त्यै-
वाचस्ते शाहभूपश्रवणमणिगणालङ्कृतास्सत्कवीनाम् ।।२३।।

**23.** நல்ல கவிஞன் புகழைப்பாட, இருந்ததை மிகைப்படுத்தி இல்லாததை கானல் நீராக்கி செய்யாமல் சக்ரவாக பறவைகள் மேக நீரையே பருகுவது போல புகழை அடிப்படையாகக்கொண்டு புலவர்கள் பாடுகிறார்கள் போலும். கட்டளை இட்டு கருணைக் காட்டி எதிரிகளையும் நண்பர்களையும் நின் பக்கம் இழுக்கும் ஆற்றல் கவிதைக்கான கருவூலங்களன்றே.

वाताशाभोगवत्यामपि स सुविदिता वासवन्तः समस्तैः-
सत्रेस्नातित्वदीयान्वयवरविहिते सोऽमरवत्यदीश ।
सख्य प्राप्यापि भिक्षामटतिनटपतिः पत्युरेवालकायाः-
तत्पुर्याव-शाहक्षितिपरुपमा ते धनिष्ठा ततोऽसौ ।।२४।।

**24.** அவிட்டம் என்றால் அந்த நட்சத்திரம் செல்வந்தனுக்கானது எனும் உலகுமொழி உனக்கு உவமையாகிவிட்டது. நடராஜனும் அழகைக்கண்டு ஆடிட சிவனே நின்னிடம் பிக்ஷையெடுக்க நீயே அலகாபுரி மன்னனாக, குபேரனாக அமரர்தலைவன்

தேவேந்திரனாக, தேவேந்திரனுடைய வம்சமும் உனது வம்சமாக குளிர்க்காற்று நல்ல மனதை மக்களிடம் காட்டிட அஷ்டவஸுக்கள் ஆனந்தம் பொழிந்திட நின் அரசாட்சி தனிஷ்டர்கள் ஆட்சியென்றால் மிகையாகாது.

रोगे वैराभिधाने पृथुतरशठिनै श्रमकृतध्वस्त प्रायः-
सद्यो विधत्ते कति विषय कतिपयलघुना सङ्घशोपि ।
केषांचित्सर्पभारं निगमयति गुहावासमन्येषु वक्ति-
श्रीशाहक्ष्मापते तौ शतभिषणमश्शी विक्रमः श्रीतदीहे ।।२५।।

25. சதயம் என்று ஓர் நக்ஷத்திரம் அந்த நக்ஷத்திரம் ஆயிரம் வருடம் கண்ட ராஜராஜன் சதயமாய் நீ ராஜாதிராஜனாய் அவனுக்குச் சமமாய் ஆதிசேஷ ஸர்பங்கள் குடைபிடித்து நிற்க திங்நாகங்கள் திக்கை காப்பாற்றவேண்டி சிரமமில்லாமையால் குஹைக்குள் ஓடிவிட்டனவோ. விரோதம் என்பது மக்களிடையே ஒருவருக்கொருவரில்லை. உனக்கும் உன் பக்கத்து நாட்டவருக்கும் ரோகம் இருந்ததே தவிர ரோதமெனும் விரோதம் தேசத்திலில்லை. கூட்டமாக வந்தாலும் பிரிந்து வந்தாலும் உன்னை எதிர்க்க முடியாது.

श्रीशाहक्षोणिपालार्जितबलभवतां जैत्रयात्रा प्रसङ्गैः
सेनैराङ्गैयातितस्यापि नानापुरतो धूलिपालि धरण्योः ।
अग्रतन्यास्तदाग्राजयपटहाघटोभांकृतिस्तैतदग्रे-
भीताः ..क प्रोष्ठपादास्त्वरिधरि धरणिपालिहन्त ।
कीर्तिस्त्वदग्रे।।२६।।

26. மாமன்னரே ! உன் முன்பு புகழ் என்பது நிமிர்ந்து நிற்கும். நின் வீரத்தால் அதர்மங்கள் அடியோடு ஒழிந்திட தர்மம் தலைநிமிர சமரசமடைந்த மன்னர்கள் நிமிர்ந்து நிற்க வண்டியில் பூட்டிய நிமிர்ந்து ஓடும் குதிரைகளாக நண்பர்களும், காளை மாடுகள் போல் குனிந்தே செல்லும் எதிரிகள் யாரும் நின் குறுக்கே வரமாட்டார்கள். விஜய யாத்திரை புறப்படுகிறது என்று முரசு கொட்டினால் எதிரிகளின் பூமிகளெல்லாம் தரிசு நிலங்களாகும் ஸ்ரீசாஹ சக்ரவர்த்தியென்றால் சொல்லவும் வேண்டுமோ ?

राजन् निध्यातिभावेमीत्वीन्दुरुभुजलन जण्डकोदण्डनिर्यात्
प्रागल्भोङ्कानुपुङ्खप्रकुमरविशिकावृत्तमालैस्सुकठोरभा ।
वक्षोजकुम्भद्वितये दृढपरिरम्भसम्भावितस्यास्वैयं
वादोत्त रणं भवसि हि विषयस्याशिषां विद्विषोऽपि ।।२७।।

27. எதிரிகளும் உன் அன்பை பெற்றிட மகளிர்களும் மஹாராணிகளும் நின்னை ஆலிங்கனம் பண்ணி ஸந்தோஷத்தையடைகின்றனர். புஜபலத்தால் இராமனாகவும், புத்திபலத்தால் இலக்குவன் போலவும் பணிவு பலத்தால் பரத சத்ருக்னன் போலவும் இருக்கக்கூடிய உம்மிடத்தில் பருவ மங்கைகளும் பட்டத்து இளவரசிகளும் நின் புஜபலத்தில் அடங்குவ என்றால் மற்ற அரசர்களைப் பற்றி கேட்கவும் வேண்டுமோ!

कौटिल्यं केशवेशे भृतरकृशता मधयदेशेऽङ्गनानां-
काठिन्यं पीनवक्षोरुः कलशयुगे चापलं लोचनेश ।
मृध्वी तत्वं नितम्भे परमधरदले रागभूमेति दोषा
क्षोणीं वि रेवतीर्णी गुणयति ददते नाम शाहक्षितीन्द्रौ ।।२८।।

*28. கௌடில்யம் என்கிற குறுக்கு வழி மற்றும் அலங்கோலமெல்லாம் சிகை அலங்காரத்தில் இருந்ததே தவிர இராஜ நீதியில் இல்லை. இளைப்பு என்பது மனிதர்களின் ப்ரஜைகளின் சரீரத்தில் இல்லை. ஆனால் அழகு பெண்களின் இடுப்பிலிருந்தது. கடினத் தன்மை பருவ மங்கைகளின் கொங்கைகளில் இருந்தது. சபலம் என்கிற ஆசை மக்களுக்கு இல்லை. நின் கண்களின் பார்வையால் சபலமென்று சதிரிள மங்கையர்கள் நினைத்தனர். உதடுகளென்ன கோவைக்கனிகளோ உள்ளிருக்கும் பற்களென்ன முத்துக்களோ ! முராரியின் ரேவதியோ உன் தேசபூமி அரசே!*

श्री शाहक्षोणिपालप्रभुवररुचिमन्नायकद्योतमाना-
हृद्या सद्धात्तमुक्ताफलखचितगुणस्याति सन्तर्शनीया ।
विद्वन्नारायणेन प्रकटितरमा भासुरालङ्क्रियाभिः-
सेषा नक्षत्रमाला विलसतु विदुषां कण्ठभूषायमाणा ।।२९।।

*29. நாராயணன் என்கிற இந்தப் பண்டிதனால் பெருமைப்படுத்தப்பட்ட செல்வமும் மற்றும் நக்ஷத்திர மாலைகளாக கழுத்து மாலையாக பண்டிதர்களுக்கு பிரகாசிக்கட்டும். உள்ளம் கவர்முத்துக்கள் கோத்திட உற்சாகமூட்டும் கண்கள் மலர்ந்திட நாயகன் நீயேயென்று மற்றவர்கள் நாயகிகளாகி என் கவிதைக்கொண்டு அவர்கள் பாமாலைச் சூடுவர் உனக்கு.*

रक्षाकर्मणि दीक्षिते त्वयि भवं भद्राणि निद्राग्रहं-
प्रायेण प्रणयोद्धतः प्रणयिनां नर्माणि निर्मातिना ।
विद्वन्मण्डलमण्डने गतिरसौ श्रीशाहपृथ्वीपते-
र्हृष्यन्ति विकिरत्वसौ प्रतिपदं लक्ष्मीकटाक्षाङ्कुरान् ।।३०।।

*30.* ரக்ஷணம் எனது (தீக்ஷை) வ்ரதம். எங்கும் மங்களம் எனது உறுதிமொழி. நல்வார்த்தைகள் எனது தாரகமந்திரம் பண்டிதமணிகளின் நடுவே வஜ்ரத்தில் கோர்த்த கவிதை எனது நூல். லக்ஷ்மீ கடாக்ஷங்கள் பாதமிட்டு மலர்ந்த பாமாலைகள் எனது பூமாலைகளான கவிதைகள். இதனைக் கண்டு இறைவனும் காவ்ய இன்பம் படைத்தவர்களும் காமுறுவதில் கவிஞன் கவிதை எழுதுவான். அதனாலேயே அவனை கவி: கரோதி காவ்யாநி என்பார்கள். அதை ரஸிப்பவர்கள் ரஸம் ஜானந்தி பண்டிதா: என்பார்கள்.

பண்டிதர்களால் ஸந்தோஷப்படக்கூடிய நக்ஷத்திர மாலையாகிற இந்த நூலை ஸ்ரீசாஹ மன்னரான உமக்கே சூட்டுகிறேன். மாலைப் பொழுதில் வந்த மன்னனின் மகுடங்கள் என் மனதிற்குள் ஆனந்தம். அது உங்களுக்கும் படிப்பதால் கிடைக்குமென்று பரதம் சொல்லி பாரதமன்னர் ஸ்ரீசாஹனுக்கு அர்ப்பணிகின்றேன் என்பதோடு இந்த சாஹ நக்ஷத்ரமாலா என்னும் சிறுகாப்பியம் நிறைவினைத் தழுவுகின்றது.



பிற்சேற்கை - I

## லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில் நக்ஷத்ரமாலா ஸ்தபகம்

கி.பி. 1590ல் அரசாணிப்பாலை கிராமத்தில் பிறந்து மஹாகவியான ஸ்ரீ வேங்கடாத்வரி மிக்க வேதாந்தியாகவும் வாழ்ந்தவர். அவர் இயற்றிய பல நூல்களில் ஸ்ரீ லக்ஷ்மீ ஸஹஸ்ரமும் ஒன்று. 25 ஸ்தபகங்கள் கொண்ட இந்நூல் உயர்ந்த ஒரு ஸ்தோத்ர காவ்யமாகும். இந்நூலின் 15 வது ஸ்தபகம் நக்ஷத்ரமாலா என்ற பெயரை உடையது. லக்ஷ்மியைப் பற்றி வர்ணிக்கும் இந்நூலில் அஸ்வனீ முதல் ரேவதி வரையுள்ள நக்ஷத்திரங்களும் லக்ஷ்மியின் அருளாலேயே தோன்றின என்று அவைகளின் தோற்றத்தை மிக அழகாகக் குறிப்பிடுகிறார். ஆகையால் அவர் குறிப்பிட்டுள்ள நக்ஷத்திரப்பெயர்களின் சொல்லை மட்டும் சுட்டிக்காட்டி கருத்துக்களையும் இந்நூலின் இப்பகுதியில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. மேலும் நக்ஷத்திரங்களின் தோற்றத்தை மட்டும் கூறி முடிக்காமல் அவற்றின் லக்னப் பலன்களையும், அந்தந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்கு ஏற்படும் பலன்கள் முதலியனவைகளையும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இந்த நக்ஷத்திரமாலா பற்றி எழுதுவதற்கு முன் காவ்யத்தைப் பற்றியும் கவியைப் பற்றியும் ஸாமான்யமாக குறிப்பிடப்பட்டுள்ளது. இவைகள் படிப்பவர்களுக்கு ஒரு அறிமுகம் ஏற்படுவதற்காக எழுதப்பட்டவை என்பதே என் தாழ்மையான கருத்து.

**காவ்யம்:-**

காவ்யம் என்ற பதத்திற்குக் கவி எழுதியது என்பது பொருள். இதையே कविः करोति काव्यानि என்பார்கள். காவ்யம் இயற்றப் புகுந்த மஹாகவிகள் தம் புத்தியில் விஷய சித்திரத்தை எழுதி அதில் ஆழ்ந்து தந்மயத்வம் எனப்படுகின்ற ஐக்யத்தை அடைகிறார்களாகையால் அது யோக நிஷ்டை. சாதாரணமாக உலகத்தில் காணப்படாத ரஸமயமான பல நிகழ்ச்சிகளை அவர்கள் அதில் கண்டு வெளியிடுவார்கள். கடந்து காலத்து விஷயங்களை மறக்காமல் தரிக்கின்ற அறிவு ஸ்ம்ருதி அல்லது நினைவு என்றும் வருங்கால விஷயங்களை நிச்சயிக்கும் சக்தியுள்ள அறிவு மதி என்றும், நிகழ்கால விஷயங்களை உள்ளபடி அறியக்கூடியஅறிவு புத்தி என்றும், இம்மூன்று சக்தியும் வாய்ந்த அறிவு ப்ரஜ்ஞை என்றும், மேல்மேல் புதிதுபுதிதாகக் கற்பனை செய்வதற்கேற்ற சக்தி வாய்ந்த ப்ரஜ்ஞை ப்ரதிபை அதாவது नव नवोन्मेषाशाली प्रतिभा என்றும் கூறப்படும். இந்த ப்ரதிபை கவித்துவத்திற்கு முக்கிய காரணம். இது இராதவர் கவியாக முடியாது. இதன் ஏற்றத்தாழ்வினால் கவிகளுக்குள் ஏற்றத் தாழ்வுகள் உண்டாகின்றன.

अपारे काव्यसंसारे कविरेकः प्रजापतिः ।
अथास्मै रोचते विश्वं तथेदं परिवर्तते ।।

भावानचेतनानपि चेतनवच्चेतनानचेतनवत् ।
व्यवहारयति यथेष्टं सुकविः काव्ये स्वतन्त्रतया ।।

படைப்பாளிகளான கவியுலகத்தில் கவிஞனே படைக்கும் கடவுளாக இருக்கிறான். இவன் தன்னுடைய கற்பனை சக்தியினால் காவ்யங்களில் உயிருள்ள பொருட்களை உயிரற்ற பொருட்களாகவும், உயிரற்ற பொருட்களை உயிருள்ள பொருட்களாகவும் படைக்கக்கூடிய கவிஞர்கள் பலர் இருந்தாலும் சிலரே மஹா கவிஞர்கள் என்ற பதவியை அலங்கரிக்கின்றனர். அவர்கள் படைத்த காவ்யங்களையும் மஹா காவ்யங்கள் என்றே அழைக்கப் படுகிறது.

**காவ்ய வகை மற்றும் சிறப்புகள்:-**

பாட்டின் வடிவிலே அமைந்தது மட்டுமே காவ்யம் என்பது இல்லை. வசன நடையிலே அமைந்துள்ளதையும் காவ்யம் என்றே கூறுவர். தண்டியாசிரியர் காவ்யத்தைப் பகுக்குங்கால், செய்யுளானது (पद्यात्मकम्), வசன நடையானது (गद्यात्मकम्), இரண்டும் கலந்து அமைந்தது (उभयात्मकम्) என மூவகையாகப் பிரித்து காண்பித்தார். காவ்யத்தை வேறு வகையிலும் பிரிப்பர். காதால் கேட்டும், படித்தும் அனுபவித்தற்குரிய காவ்யத்தை ச்ரவ்ய காவ்யம் (श्रव्यम्) என்பர். இராமாயணம், ரகுவம்சம் முதலியவை. நடித்துக் காண்பிக்க வசதியாக எழுதப்படுவது த்ருச்ய காவ்யம் (दृश्यम्) என்பர். உத்தரராமசரிதம், சாகுந்தலம் முதலியவை. இனி இக்காவ்யங்க்ளை மஹாகாவ்யம், கண்டகாவ்யம் என அவற்றின் அளவு முதலியன கருதி மற்றொரு வகையிலும் பகுப்பர். மஹாகாவ்யத்திற்குத் தேவையான அம்சங்கள் அலங்கார சாஸ்திரங்களிலே விரிவாகக் கூறப் பட்டுள்ளன. மஹாகாவ்யத்தின் உட்பிரிவுகள் ஸர்க்கங்கள் என அழைக்கப்படும். காவ்யத்தின்

தலைவன் தேவனாகவோ, நற்குடியில் பிறந்து, தீர உதாத்தனுக்குரிய குணங்களுடன் கூடிய க்ஷத்ரிய னாகவோ இருக்கலாம். ரகுவம்சத்தில் இருப்பதுபோல் ஒரே வம்சத்தில் தோன்றிய பலரும் நாயகர்களாக இருக்கத்தக்கவர்களே. ச்ருங்காரம், வீரம், சாந்தம் என்ற மூன்றினுள்ஒன்று முக்கியமான ரஸமாகவும், மற்ற ரஸங்கள் அதற்குப் புஷ்டி தருகின்றனவாகவும் அமைதல் வேண்டும். கதை இதிஹாஸங்களிலிருந்து எடுக்கப்பட்டதாகவோ அல்லது உத்தமமான ஒரு மனிதனைப் பற்றியதாகவோ இருக்கலாம். துஷ்டர்களின் இழிகுணத்தை நிந்தித்தும், நல்லோர்களின் சிறப்பியல்பு களைப் புகழ்ந்தும் கூறவேண்டும்.

**மஹாகாவ்யத்தின் சிறப்புகள்:-**

நகரம், ஸமுத்ரம், மலை, பருவங்கள், சந்திரஸூர்யோதயங்கள், ஜலக்ரீடை, பூங்காவில் விளையாடுதல், மதுபானம், காதலர்களின் பிரிவு, சேர்க்கை, விவாஹம், புத்திரன் பிறப்பு, போர் முதலியன பற்றிய வர்ணனைகள் மஹா காவ்யத்தில் இடம் பெற்றிருக்க வேண்டும். ரஸம், பாவம், பலவகை அணிகள் இவை நிரம்பி, காதிற்கினிய விருத்தங்களிலே அமைந்து மனதை மகிழ்விப்பதாகவும் மஹாகாவ்யம் இருக்கவேண்டும். ஸர்க்கங்களின் மொத்த எண் எட்டிற்குக் குறையாமலும், முப்பதிற்கு மேற்படாமலும் இருக்கவேண்டும் என்பது சிலர் கருத்து. ஸர்க்கங்கள் மிக நீண்டிருத்தலும் கூடாது, ஒவ்வொரு ஸர்க்கத்தின் இறுதியிலும் விருத்தங்கள் மாற்றப்படவேண்டும். அதனாலேயே இவற்றிற்கு सर्गबन्धो महाकाव्यम् என்று பெயர்.

மேலும் இவற்றில் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நால்வகைப் புருஷார்த்தங்களையும் அடைவதற்கான முறைகளைத் தெளிவாகக் கூற வேண்டும். பொதுவாக காவ்யத்தின் பயனைக் கூறுமிடத்து பொருள், புகழ், உலக அறிவு, தீயன நீக்கி நலனை அடைதல் பிரம்மானந்தத்திற்கு சமமான காவ்யத்தை படைத்தல், ஒரு காதலி தன் கருத்தைக் காதலனுக்குத் தெரிவிப்பதுபோல்சொல்லாமற் சொல்லி அறத்தின் அறிவைப் புகட்டுதல் முதலியன பயனாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஆனால் உண்மையான காவ்யப்பயனை ஆராய்ந்த பெரியோர்கள் இலக்கியச்சுவை அனுபவித்தலே பயன் என்றும், நீதி புகட்டுவதிலே காவ்யத்திற்கு முக்கிய நோக்கு இருக்கவேண்டியதில்லையென்று கருதுகின்றனர். அத்தகைய சுவை காவ்யத்தினின்றும் வெளிப்படையாகத் தெரிகின்ற பதப்பொருளைக் காட்டிலும் தொனிக்கின்ற உட்பொருளை இறைச்சிப் பொருளாலேயே மிகுதியும் பெறப்படும் எனக்கூறுவர். இத்தொனி என்பது, சுலோகத்திலுள்ள பதங்கள் ஒன்றோடு ஒன்று அந்வயம் பெற்றுத் தெளிவான ஒரு பொருளைத் தெரிவித்து நின்றுவிடுகின்றன. ஆனால் அவ்வாறு வெளியிடப்பட்ட கருத்து பிறிதொரு கருத்தை வெளியிடும் தன்மை வாய்ந்ததாக இருப்பதுண்டு. இவ்வாறு உள்ளதை த்வனி என்றும் வ்யங்கம் என்றும் கூறுவர். இதுவே காவ்யத்தின் உயிர். இத்தகைய த்வனியை புலப்படுத்தும் சக்தி ஒரு கருத்துக்கும் உண்டு. ஒரு பதத்திற்கும் உண்டு. இவ்வாறு தொனிக்கப்படுவது காதல் முதலிய ரஸமாகவோ உவமை முதலிய அணியாகவோ அல்லது கதையின் ஒரு

பகுதியாகவோ இருக்கலாம். இவற்றை முறையே ரஸத்வனி(रसध्वनि) அலங்காரத்வனி (अलङ्कारध्वनि), வஸ்துத்வனி (वस्तुध्वनि) என்பர். இம்மூவகை த்வனியிலும் ரஸத்வனியே சிறந்தது. அது குன்றாது இருக்கச் செய்வதே கவியின் முக்கியமான நோக்காக இருக்க வேண்டும். இத்தகைய ரஸத்வனி நிறைந்த காவ்யமே காவ்யங்களிலே சிறந்ததாகக் கருதப்படுகிறது. இத்தகைய த்வனியை அநுபவிக்கும் பொழுது கவிஞனின் மனத்துடன் ஒத்த மனதையுடைய ரஸிகனின் மனம் மட்டற்ற மகிழ்ச்சியை அடைகிறது. இம்மகிழ்ச்சி பிரம்மானந்தத்திற்கு ஒப்பானதாகும்.

**இராமாயண காவ்யம்:-**

ஒரு சுலோகம் எழுதுவதனால் அதற்குத் தனியே ஒரு விஷயம் இருக்கவேண்டும். அந்த சுலோகம் ஏதாவதொரு சந்தஸ்ஸில் அமையவேண்டும். இருபத்து நான்கு எழுத்துக்கள் கொண்ட காயத்ரி முதலான சந்தஸ்ஸுக்கள் இருந்தாலும் சாதாரணமாக மஹாகவிஞர் களுக்கு அநுஷ்டுப் சந்தஸ் பயன்படுத்துவதிலேயே நோக்கிருந்தது என்றால் அது மிகையாகாது. சந்தஸ்ஸுக் களிலேயே மிகச் சிறியது இந்த அநுஷ்டுப் சந்தஸ்தான். பெரும்பாலும் எல்லா கவிகளும் தங்களது நூலை எழுத ஆரம்பிக்குங்கால் அநுஷ்டுப் சந்தஸ்ஸையே பயன்படுத்தி யுள்ளனர். वेदः प्राचेतसात् आसीत् साक्षात् रामायणम् என்றபடி மஹாகவியான வால்மீகி முப்பத்திரண்டு எழுத்துக்களுள்ள அநுஷ்டுப் சந்தஸ் மூலமாக சந்தோமயமான வேதத்தையே இராமாயண காவ்யமாக வடிவமைத்துக் கொடுத்தார். சொல்லும் பொருளும்

சேர்ந்து காவ்யமாகின்றன. இன்பத்தில் பரவசமாயிருந்த இரண்டு பக்ஷிகளில் ஒன்று கொல்லப்பட்டதனால் உண்டான பரிதாப நிலையைப் பார்த்து வருந்திய வால்மீகி சோகம் உள்ளடங்காமல் 'மா நிஷாத' என்ற சுலோக உருவில் இராமாயணம் உருவெடுத்தது. இதன் கருத்தாவது இராமனுடைய சரித்திரமாகிற பொருள் இராமாயணம் என்ற சொல்லுருவில் தோன்றுவதற்கு சோகம் ஏற்பட்டு சுலோகமாக வெளிப்பட்டிருக்கிறது.

அலங்கார சாஸ்த்திர நிபுணர்கள் மற்றொன்று கூறுவர். வால்மீகியின் சோகம் சுலோகமாக மாறிற்று. அவர் எழுத்துக்களை எண்ணி பதங்களைக் கூட்டிப் பாதம் பாதமாகச் சேர்த்துக் கட்டின சுலோகமன்று. அவருக்கு தெரியாமலேயே எதிர்பாராமல் ஓர் சோக நிகழ்ச்சியினால் ஏற்பட்டது. இப்படித்தானாக உருவெடுத்ததுதான் காவ்யத்தின் உண்மைநிலை. காவ்யம் எழுதுவதற்காக உட்கார்ந்த மஹாகவிகளின் அகக்கண்முன் அவர்கள் எடுத்துக்கொண்ட விஷயமும்அதன் தொடர்புடைய மற்றவைகளும்அப்படியே தோன்றும். ஒவ்வொன்றும் அவர்களுடைய புத்தியில் எழுதப்பட்ட சித்திரமாகும். இவர்களுடைய பிரதிபையினால் அது மேன்மேலும் அழகுபெறும். ரஸம் எனப்படும் சுவையாக மாறும். அது உள்ளடங்காமல் வெளிப்படும். சொல்லழகு பொருளழகு எல்லாம் அமைந்த உருவத்தில் வெளிப்படும். ரஸத்தின் இந்த உருவமே காவ்யம். இதில் சொல் விஷயத்திலோ பொருள் விஷயத்திலோ, அவற்றின் அலங்கார விஷயத்திலோ கவிக்கு எந்தவித முயற்சியும் இராது. எல்லாம் தானே அமைந்து உத்தம காவ்யம் என்னுபடியான சிறப்பைப் பெறும். இப்படி அல்லாதது

உத்தம காவ்யமாகாது. காவ்யத்திற்கு ரஸமே ஆத்மா. மற்றதெல்லாம் அதற்கு அங்கம். தானே தோன்றிய ராமாயண சுலோகம் இந்த உண்மையை விளக்குகின்றது என்பது அலங்கார சாஸ்த்திரகாரர்கள் செய்திருக்கும் ஸித்தாந்தம்.

ரகுவம்ச காவ்யம்:-

ஆதிகவியான வால்மீகி இயற்றிய மஹா காவ்யமான இராமாயணத்தை அடிப்படையாகக்கொண்டே மற்ற காவ்யங்களெல்லாம் படைக்கப்பட்டிருக்கின்றன. மஹாகவி காளிதாசரின் ரகுவம்சத்திற்குப் பெரும்பாலும் முதல் நூலாக இருந்தது வால்மீகி இராமாயணமே. காளிதாசர் சிறந்த பிரதிபையுடையவர். கலைகளில் சிறந்த அறிவு வாய்ந்தவர். காவ்ய ரஸத்தைத்தாமும் அனுபவித்துப் பிறரையும் அனுபவிக்கச்செய்யும்ஆற்றல் வாய்ந்தவர். சாஸ்த்திர அறிவும் பெற்றவர். இத்தகைய சிறப்புகள் வாய்ந்தவர் என்பது அவரது நூலைப் படிக்கும்போதே புலனாகும். (வால்மீகியைப் போன்றே வர்ணித்திருப்பதை இவரது நூலில் காண முடிகிறது) ஐம்பெருங்காவ்யங்களில் ஒன்றான ரகுவம்ச காவ்யம் பத்தொன்பது ஸர்க்கங்கள் கொண்டது. திலீபன் தொடங்கி அக்னிவர்ணன் ஈறாகவுள்ள இருபத்தொன்பது அரசர்களின் வரலாற்றைக் கூறுமுகமாகத் தர்மார்த்த காமங்களின் உண்மையான இயல்புகளைப் பலவகையிலும் தெளிவாகக் கூறுகின்றது. வைதர்பம் என்றழைக்கப்படும் சொல் நடையிலே அமைந்து, சொல் பொருள் சுவைகளிலே சிறந்து, தான் கூறும் பொருளைக் கண்முன் காட்டுவது போன்று மனத்திலே பதியும்படி

தெள்ளிய இனிய முறையிலே எடுத்துக்கூறுவது. சிறந்த உவமைகளும், ஆழ்ந்த கருத்துக்களும் காவ்யம் முழுவதுமே விரவிக்காணப்படும். இக்காவ்யம் பல தலைவர்களைக் கொண்டது. இதில் முக்கியமான சுவை மஹாபாரதத்தில் இருப்பது போல் சாந்த ரஸமே என்பர் சிலர். சிருங்காரம் என்பது பலர் கருத்து. ச்ரவ்ய காவ்யங்களிலே காளிதாசர் கடைசியாக இயற்றியது ரகுவம்சம் என்பர்.

இராமாயண காவ்யத்தில் வால்மீகியின் வர்ணனை போன்றே இவரது காவ்யத்திலும் வர்ணனைகள் காணப்படுகின்றன. அரசன் தன் மனைவி சுதக்ஷிணையுடன் காட்டிற்குச் சென்று மஹரிஷிகளின் வாழ்க்கையை மேற்கொண்டான். பெரும் சக்ரவர்த்தியான அவன் ஆச்ரமத்திலே மாடு மேய்ப்பதிலே ஈடுபட்டான். இவ்வாறு தன்னலத்தியாகமும், எளிமையும் நிறைந்துள்ள ஆச்ரமத்திலே தொடங்குகின்ற ரகுவம்ச காவ்யம் அரண்மனையின் செல்வச்சிறப்பு வர்ணனையிலும் அதிக சுகானுபவத்தைக் கூறுவதிலும் முடிவு பெறுகிறது. அமைதியும் அடக்கமுமுள்ள சொல்நடையிலே, அவர், தூய நன்னடையால் உயர்ந்துள்ள அரசரது பெருமையைப் பேசுகின்றார். அமைதியான சூர்யோதயத்துடன் தொடங்கும் காலைப்பொழுதுபோல் அவரது காவ்யம் சாந்தத்துடன் ஆரம்பமாகின்றது. பலவர்ணக்கதிர்களுடன் காட்சியளிக்கும் சூர்யாஸ்தமனம் போல் காவ்யத்தின் முடிவு, உணர்ச்சி ஊட்டத்தக்க சொல்வளத்திலே விவரிக்கப்பட்டுள்ளது. சூரியாஸ்தமனத்திற்குப்பின் இருள் சூழ்வது போல், காவியத்தின் முடிவில் ஒளி முழுவதும் மறைந்து ஒரு இருள் சூழ்கின்றது.

வனத்தில் வசிக்கும் மஹரிஷிகளின் உபதேசம் ரகுவம்சத்தின் இவ்வகையான தொடக்கத்திலும் முடிவிலுமே புதைந்து கிடைக்கின்றது. அமைதியான தன்னடக்கம், தூய்மை, தியாகம் என்ற இம்மூன்றும் சுற்றிலுமுள்ள வரையில்தான் மக்களின் நலம் நிறைந்த எதிர்கால வாழ்வு மிளிரும் என்ற இவ்வுண்மை அவரது காவ்யமான ரகுவம்சம் முழுவதிலுமே ஊடுருவியுள்ளது. அழிவு நிச்சயம் என்ற நிலை ஏற்படின், பெரும் பசியுள்ள ஆசைத்தீ பல திசைகளிலும் ஜ்வாலைகளைக் காட்டுவதாய் தனது ஒளியால் மக்களின் மனக்கண்களைப் பறித்துக் குருடாக்குகின்றது. பத்தொன்பது ஸர்க்கங்கள் கொண்ட இக்காவ்யத்தில் பதினெட்டாவது ஸர்க்கத்தில் மிகச்சுருக்கமாக இருபத்தொரு அரசர்களைப்பற்றி கூறப்பட்டுள்ளது. மேலும் இந்த ஸர்க்கத்தில் கூறியுள்ள பகுதிக்கு மட்டுமே கவி விஷ்ணுபுராணத்தையோ, வாயு புராணத்தையோ ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டுமெனத் தெரிகின்றது.

**தோத்திர காவ்யம்:-**

மஹாகவிகள் பல ஸர்க்கங்களைக்கொண்டு தான் படைத்ததான மஹாகாவ்யங்களைத் தவிர சிறிய அளவிலும் பல காவ்யங்கள் படைத்துள்ளனர். இதனால் பிறகாலத்தில் வரும் கவிஞர்கள் சிறிய சிறிய காவ்யங்கள் தோத்திர வடிவில் படைப்பதற்கு அநுகூலமாக இருந்திருக்கின்றன. பலவகையான சந்தஸ்ஸை பயன்படுத்தி அல்லது ஒரு பகுதிக்கு ஒரு சந்தஸ் வகையிலும் பல கவிஞர்கள் பலவகையான ஸ்தோத்திர நூல்களை இயற்றியுள்ளனர். இவ்வகையான தோத்திர

நூல்களில் மஹாகாவ்யங்களில் காணப்படும் சொல்லழகு, பொருளழகு, சந்தஸ், ரஸம், அலங்காரம் முதலியவைகளும் அமைந்திருக்கின்றன. ஆகையாலே சிறியதாக தோத்திர வடிவிலே இருந்தாலும் மஹாகாவ்யங்கள் போதிக்கக்கூடிய தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் போன்ற புருஷார்த்தங்களையும் போதிப்பதில் தவறவில்லை. ஆதலால் இவைகள் தோத்திர காவ்யம் என்பர். வேதாந்த தேசிகர் என்ற கவி பல தோத்திர நூல்களை இயற்றியுள்ளார். அவற்றில் பாதுகா ஸஹஸ்ரம் என்ற தோத்திர நூலும் ஒன்று. ஆயிரம் சுலோகங்கள் கொண்ட இந்நூல் முப்பத்திரண்டு பத்ததிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பாதுகையை மட்டும் விஷயமாகக்கொண்டு இயற்றப்பட்ட நூலானது இராம சரித்திரத்தை முழுவதுமாக கூறவந்ததாக அமைந்திருக்கிறது.

இராமன் இராவணனை வதம் செய்து லங்கையிலிருந்து திரும்பி வந்து பரதனோடு சேர்வது இராமாயணத்தில் ஒரு முக்கிய நிகழ்ச்சியாக காட்டப்பட்டுள்ளது. இது சகோதர்களின் பரஸ்பர ப்ரேம உச்சநிலையை காண்பிக்கக்கூடிய நிகழ்ச்சியாகும். இந்நூலில் எட்டாவது பத்ததியில் கவி இந்நிகழ்ச்சியை வர்ணிக்கிறார். பரதன் மகுடம் சூட மறுத்து, இராமனுடைய பாதுகைகளை ஸிம்மாஸனத்தில் வைத்து அதற்கு பட்டாபிஷேகம் செய்து வைத்து பாதுகையை அரசாள வைக்கிறான். இப்பொழுது இராமனுடைய வருகையை முன்னரே அறிவிப்பதற்காக பரதனிடம் வந்த அனுமன் பாதுகையினிடத்தில் அறிவித்தார் என்றும், அதைக்கேட்ட பாதுகை யானை மீதேறி பரதனோடு இராமனிடம் சென்றது என்று கவி வர்ணிக்கிறார். முப்பது

சுலோகங்கள் கொண்ட இப்பத்ததியில் பதினான்கு சுலோகங்கள் பாதுகையின் பட்டாபிஷேகம் முதல் ராவண ஸம்ஹாரம் வரை கூறப்பட்டுள்ளது. மேலும் பதினான்கு வருஷங்களுக்கு பதினான்கு சுலோகங்களாக அமைத்து சார்த்தூல விக்ரீடித சந்தஸ்ஸில் பத்ததியை முடித்திருப்பது கவியின் பிரதிபையை எடுத்துக்காட்டுகிறது. கவியின் ப்ரதிபையில் ஓடும் ரஸப்ரவாஹம் தனக்கேற்ற சொற்களை அமைத்து ஸரளமும் கம்பீரமும் மதுரமும் நிறைந்த சுலோகங்கள் படிக்கும் பொழுதே ஆனந்தத்தை கொடுப்பவையாகும். இந்த தோத்திர காவ்யங்கள் இறைவனின் கதையைக் கூறுவதாக அமைந்துள்ளதால் படிப்பவர்களுக்கு துதி செய்யப்பட்ட பலன்கள் கிடைக்கப்பெறுகின்றன.

**லக்ஷ்மீ ஸஹஸ்ரம்:-**

தோத்திர நூல்கள் பத்ததிகளாகவும், ஸ்தபகங்களாகவும் பிரித்துக்காட்டப்படுகின்றன. மஹாலக்ஷ்மியின் விஷயமாக வேங்கடாத்வரி என்ற கவி லக்ஷ்மீ ஸஹஸ்ரம் என்ற நூலை இயற்றியுள்ளார். இவர் பல நூல்களை இயற்றியவர். இந்நூலிலுள்ள பகுதிகளை இருபத்துநான்கு ஸ்தபகங்களாகப் பிரித்துள்ளார். லக்ஷ்மீதேவியின் பெருமைகளை பலவகையாக வர்ணிக்கும் இவர் பதினைந்தாவது ஸ்தபகத்தில் இருபத்தேழு நக்ஷத்திரங்களாக இருப்பவளும் நீயே என்று வர்ணிக்கிறார். ஆகையாலே இந்த ஸ்தபகத்திற்கு நக்ஷத்ரமாலா ஸ்தபகம் என்றே பெயரும் சூட்டியுள்ளார்.

**நக்ஷத்ரமாலா ஸ்தபகம்:-**

**அஸ்விநீ**

இந்த ஸ்தபகத்தில் அஸ்விநீ முதல் ரேவதி வரையிலான நக்ஷத்திரங்களின் பெயர்களைக் காட்டக்கூடிய வகையில் சுலோகங்களை அமைத்துள்ளார். அதில் முதல் சுலோகம் முதல் பதிமூன்று சுலோகம் வரையிலுள்ள செய்யுள்களின் அடிகளை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு எழுத்துக்களை அதிகமாகக் கொண்டனவாகவும், பதினைந்து முதல் இருபத்தேழு சுலோகம் வரை ஒவ்வொரு அடிகளை ஒவ்வொரு எழுத்து குறைந்த அடிகளாகவும் பதினான்காவதை நடுநாயகமாகக் கொண்ட செய்யுளாகவும் அமைத்துள்ளார். ஒருவருக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் ஏற்பட்டுவிட்டால் அவர் எண்ணற்ற யானை குதிரைகளையுடைய மாபெரும் செல்வந்தராக வாழ்வர் என்று கூறி

அஸ்விநீ ஹஸ்திஸம்பந்நா ஸம்பதுஜ்ரும்பதே ந்ருணாம்

(अश्विनीहस्तिसम्पन्ना संपदुज्जृम्भते नृणाम् )

என்று வர்ணிக்கிறார்.

**பரணீ :-**

சேஷாத்ரிநாதன் மார்பில் அணிந்துள்ள எல்லா ஆபரணங்களிலும் உயர்ந்த ஆபரணமாய் அவன் மார்பில் வீற்றிருக்கும் உன்னை நல்லொழுக்கமுடையவனாய் வாழ அருள்புரிய வேண்டித் தஞ்சம் புகுகின்றேன். परमाभरणीभूताम् பரமாபரணீபூதாம் என்று பரணீ நக்ஷத்திரத் தோற்றத்தை குறிப்பிடுகிறார்.

**கிருத்திகா:-**

ஆடையில்லாததால் யானைத்தோலை உடுத்தினான் என்றும் உணவின்மையால் பிச்சை எடுத்தான் என்றும் பொருள் தோன்றினாலும் உண்மைப்பொருள் அதுவல்ல. கஜாசுர ஸம்ஹாரம் செய்தவன் என்பதும் ஆதி பிக்ஷு என்ற பெயர் உடையவன் என்பதும் உண்மைப் பொருளாம். உன்னுடன் நேரிடையான ஸம்பந்தம் இல்லாதிருந்தும் பிறவியில் உன் ஸம்பந்தத்தைப் பெற்ற சந்திரனுடன் பழகியதாலேயே சிவன் ஸமஸ்த செல்வங்களையும் வழங்க வல்லவன் ஆயினன் உனது ஸம்பந்தம் உடையோரின் ஸம்பந்தமும் செல்வ முடைமைக்குக் காரணமாகின்றது. என்பதை वस्त्रीभूतकृत्तिको भिक्षुः வஸ்த்ரீபூத க்ருத்திகோ பிக்ஷு: என்று கிருத்திகா நக்ஷத்திரத்தின் பெருமையை வர்ணிக்கிறார்.

**ரோஹிணீ: -**

உன்னுடைய கடாக்ஷமானது ஒருவன் மோக்ஷம் அடைய படிக்கட்டாக அமைகிறது என்பதை

वासुदेवनिलयाधिरोहिणीम् வாஸுதேவ நிலயாதிரோஹிணீம் என்று ரோஹிணீ நக்ஷத்திரத்தின் தோற்றத்தை வர்ணிக்கிறார்.

**மிருக சீர்ஷம்:-**

ஒரு வஸ்துவுக்கு மற்றொரு வஸ்துவைச் சமமாகக் காட்டுவது உபமானம் என்னப்படும். முகம், கண் மேனியின் ஒளிகளுக்கு உபமானமாக முறையே சந்திரன் மானின் பார்வை, மின்னல்களை உபமானமாகக் கூறுவது கவிகளின் மரபு. ஆகவே அவைகள் உபமானங்கள்

எனப்படும். முகம் முதலியன உபமேயம் எனப்படும். இவற்றுள் உபமேயத்திலும் உபமானம் உயர்ந்ததாக இருக்க வேண்டும் என்பது புலவர்கள் கையாண்ட முறை. ஆனால் உலகத்தாயின் முகம் முதலியன இவற்றுக்கு உபமானமாகக் கூறும் பொருள்களிலும் உயர்ந்ததாக இருக்கின்றன. ஆகவே அவற்றிலும் உயர்ந்த வஸ்து உலகிலேயே இல்லையாதலால் உபமானமே இல்லை. மிருகமிர: मृगशिर: என்று நக்ஷத்திரத் தோற்றத்தை வர்ணிக்கிறார்.

திருவாதிரை :-

மிக்க தயையென்ற குணத்தையுடைய தாயே ! நான் அறிவு பூர்வமாக செய்யக்கூடிய பாவங்களிலிருந்து என்னை பாவமற்றவனாக காப்பாற்றுவாயாக என்று வேண்டும்பொழுது திருவாதிரை நக்ஷத்திரத்தின் தோற்றத்தைக் கருணார்த்ரா என்று குறிப்பிடுகிறார்.

புனர்பூசம் :-

துர்வாஸ முனிவரின் சாபத்தினால் இந்திரன் தனது பதவியை இழந்து லக்ஷ்மியை துதித்து பின் அவனருளால் மறுபடியும் அப்பதவியை அடைந்தான் என்று விஷ்ணு புராணம் கூறுகிறது. இதை புனர்வஸு என்று நக்ஷத்திரத் தோற்றத்தைக் குறிப்பிடுகிறார்.

பூசம் :-

வேதநூற் பிராயம் நூறு என்று ஒருவரின் வயது நூறு என்று வேதம் கூறினாலும் அதை ஒருவரிடம் காண்பது மிக அரிது. உனது அருளால் ஒரே இடத்தில் கூடச் சேரலாம் என்ற இடத்தில் புஷ்யஸி என்ற பதத்தால் பூச நக்ஷத்திரத்தின் தோற்றத்தைக் குறிப்பிடுகிறார்.

**ஆயில்யம் :-**

அப்ஸர ஸ்த்ரீகள் தங்களது தீமைகள் அகலுவதற்காக உலகத் தாயான உன்னை வணங்கு கின்றனர். அதற்கு காரணம் சேஷாத்ரிக்கு தலைவனின் திருமேனியை அலங்கரித்துக்கொண்டு ஸம்ஸாரமாகிற சமுத்திரத்தை வற்றச் செய்பவளாக இருக்கிறாய் என்பதே. இதை शेषाचलाधीशाङ्गकाश्लेषाचल சேஷாசலாதீசாங்ககா ச்லேஷாசல என்று ஆயில்ய நக்ஷத்திரத்தின் தோற்றத்தை வர்ணிக்கிறார்.

**மகம் :-**

ஒருவன் ஸம்ஸாரத்தில் உழல்கிறான் எனில் அவன் முற்பிறவியில் செய்த நல்வினைத் தீவினைகளின் பயன்களை அனுபவிப்பதற்காகத்தான். மறுபிறவியில் எவன் தாயின் திருவடிகளை தியானிக்கிறானோ அவன் இன்னல்களுக்கு இலக்காகி வினைப்பயனுக்கு வயப்படாதவனாய், மிக உயர்ந்த இருப்பிடமாகிய பரமாத்மாவின் ஸ்தானத்தை அடைகிறான். அதனால் மண்ணுலகத்தவரால் உயர்ந்தவர்களாக மதிக்கப்படும் மதிக்கப்படும் இந்திரன், சிவன், நான்முகன் என்பவர்களின் பதவிகளையும் புல்லுக்குச் சமமாக எண்ணுகிறான் என்று வர்ணிக்கிறார். இங்கு मघोनः साम्राज्यम् மகோந: ஸாம்ராஜ்யம் என்றவிடத்தில் மக நக்ஷத்திரத்தைக் குறிப்பிடுகிறார்.

**பூரம் :-**

யௌவதம் என்பதற்கு யுவதீநாம் ஸமூஹ: யௌவதம் என்று விக்ரஹவாக்யம். தைவதம் என்பதற்கு தேவ ஏவ தேவதா. தேவதைவ தைவதம் என்பது விக்ரஹம் அர்யமதாரகம் என்பது. அர்யம மற்றும் தாரகம் எனப் பிரியும். அர்யமா - சூரியன், அர்யம ஸம்பந்தீ - சூரியன்

ஸம்பந்தமுடையது. தாரா - நக்ஷத்திரம். தாரகம் நக்ஷத்திரத்தையுடையது. ஆக சூரிய ஸம்பந்தமுடைய நக்ஷத்திரம் என்பது பொருள். அதுதான் பூர நக்ஷத்திரம் இதனை வடமொழியில் பல்குநீ என வழங்குவர். பல்குநீ நக்ஷத்ரம் அர்யமா தேவதா என்கிறது வேதம். அதை இங்கு अर्यमतारकम् அர்யமதாரகம் என்று பூர நக்ஷத்ரத் தோற்றம் வர்ணிக்கப்படுகிறது.

**உத்திரம் :-**

வேண்டுபவை யாவற்றையும் தருபவளாகிய உன்னை விட்டுத் தாழ்ந்த மனிதனைத் துதிக்கும் புத்தி எனக்கு உண்டாகாமலிருக்க வேண்டும் என வேண்டுகிறார். பூரம், உத்திரம் என்ற இரண்டு நக்ஷத்திரங்களுக்கும் பல்குநீ என்றுதான் வடமொழியில் வழக்கு. இரண்டுக்கும் வேற்றுமை தெரிவதற்காக பூரத்தை பூர்வபல்குநீ என்றும் உத்தரத்தை உத்தர பல்குநீ என்றும் வழங்குவர். வாகுத்தரா பல்குநீ वागुत्तरा फल्गुनी என்றவிடத்து உத்தர நக்ஷத்திரத் தோற்றம் கூறப்படுகிறது.

**ஹஸ்தம் :-**

இந்த நக்ஷத்திரத்தின் தோற்றத்தைப்பற்றி கவி குறிப்பிடும்பொழுது செய்யுளை சிலேடையில் அமைத்து வர்ணிக்கிறார். தாயின் கடாக்ஷத்தை அமுதப் பெருக்கோடு ஒப்பிடுகிறார். நிர்ஜர: என்ற பதத்திற்கு நீர்வீழ்ச்சி என்பது பொருள். தாயின் கடாக்ஷத்தை அமுதமாக உருவஹித்துள்ளார். பாவத்தை (பாபம்) காட்டுத்தீயாக உருவஹித்துள்ளார். பாபம் வேதவிஹிதமான நற்செயல்களைச் செய்யவொட்டாது தடுத்துச் சோம்பலை மிகுவித்து மேலும் பாபத்தைத் தோற்றுவிக்கும். எனவே நல்லவர்கள் வருந்துவர். காட்டுத்தீ எப்படி காட்டையே

அழித்துவிடுகிறதோ அப்படி பாபம் தூயதாகிய ஆத்மாவிற்கு ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என மூன்று வகையான இன்னல்களை விளைவித்து ஆத்மாவை அழித்துவிடும். காட்டுத்தீயை அழிப்பது மனிதச் செயலுக்கு உட்பட்டதன்று. பெருமழை பெய்து வெள்ளப்பெருக்கால்தான் முடியும். தாயின் அருள் கூடினால்தான் முடியும். ஆகவே ஸம்ஸாரமாகிய பாபத்தை அழிக்கும்படித் தாயை வேண்டுகிறார்.

கதம்பம் என்பதற்கு கதம்பமரம் என்றும் ஸமூஹம் என்றும் இருபொருள். விஹித+ப்ரௌட+ஆகம+வ்யாஹதி: எனப் பாபக் கருத்திற்குப் பிரிக்கவேண்டும். ஆகமம் என்றால் வேதம். அது வேதத்தில் விதிக்கப்பட்ட நற்செயல்களைக் குறிக்கிறது. வ்யாஹதி: அழிவு பாபம் நற்செயல்களைச் செய்யவிடாமல் தடுக்கிறது. காட்டுத்தீ விஹித+ப்ரௌட+ஆகம+வ்யாஹதியாக இருக்கும். அகமம் - மரம். ப்ரௌட - பெரிய என்பது பொருள். பாபம் ஹாநித + அக + விபவமாக இருக்கும். அகம் -பாபம். அது ஆத்ம ஹாநியைத் தரும். விபவத்தை பெருமையை உடையதாக இருக்கும். தீ என்ற பொருளில் ஹா எனத் தனிப்பதம். நிதாக விபவ: என்பதற்கு உஷ்ணத்தின் கொடுமை என்பது பொருள்.

சிலேடையணியும் உருவக அணியும் கலந்து வந்துள்ளன. பயாப ஹஸ்தவ भयापहस्तव என்று ஹஸ்தவ என்று ஹஸ்த நக்ஷத்திரத் தோற்றம்.

**சித்திரை:-**

ஒவ்வொரு பயனைவேண்டி ஒவ்வொருவர் ஒவ்வொருவரை வணங்குகின்றனர். யாமோவெனில் வேண்டுபவர் வேண்டிய யாவற்றையும் வழங்க

வல்லவளாக இருப்பதால் உனக்கே எல்லாப் பணிவிடைகளையும் செய்துகொண்டு எப்போதும் மனதில் தியானம் செய்கிறேன் என்கிறார் கவி. இங்கு केचित्रास கேசித்ராஸ என்ற பதத்தால் சித்திரை நக்ஷத்திரத் தோற்றத்தை குறிப்பிடுகிறார்.

**ஸ்வாதி :-**

உலக நன்மைகளைச் செய்யும் பாக்யம் பெற்றவர்களை நீ கடாக்ஷித்து அநுக்ரஹிப்பதுபோல் உலகத்தீமையை செய்பவனான என்னையும் அநுக்ரஹிப்பாயாக. அப்படிச் செய்வது உனக்கு பொருந்துவதே. ஏனெனில் வள்ளல் தன்மையில் புகழ்பெற்றது மழை. அது உலகுக்குப் பயன்படும். பலா, மா முதலான மரங்களுக்கு ஜலத்தைப் பொழிவது போல் உயிரைப் போக்கவல்ல விஷமுள்ள மரம், செடி முதலியவற்றிற்கும் நீரைப் பொழிகின்றது. தகாதவற்கும் கொடுக்கும் கொடைவள்ளல்களுக்கும் அக்கொடை குணத்தையல்லவா தோற்றுவிக்கின்றது. कलयस्वाती கலயஸ்வாதீ என்று சுவாதி நக்ஷத்திரத் தோற்றத்தை குறிப்பிடுகிறார்.

**விசாகம் :-**

இதிலிருந்து மேற்படி வரும் செய்யுள்கள் ஒவ்வொரு எழுத்து குறைந்த அடிகளையுடையதாக அமைந்திருக்கும். தாயே ! இத்தகைய பெருமை வாய்ந்த உன்னை வர்ணிப்பதற்கு சிற்றறிவினர்களான என் போன்றவர்களால் எப்படி முடியும். विशाखदन्ति விசாகதந்தி என்று பதத்தை அமைத்து இங்கு விசாக நக்ஷத்திரத் தோற்றத்தைக் குறிப்பிடுகிறார்.

